உ
சிவமயம்

# "ஒழுக்கம்"

"ஒழூக்கம் உயர் குலத்தினன்று"

ஒழுக்கமானது வாவர்க்குஞ் சிறப்பைத் தருகின்றதாதலால் அதை உயிரைப் பார்க்கிலுஞ் சிறந்ததாக்கருதி அதற்கிடையூறில்லாமல் நடத்தவேண்டு மென்பதை யுணர்ந்தவர்களே ஒழுக்கமுடையவர்கள். இக்கருத்திற்கிணங்க நமது தெய்வப் புலமைவாய்ந்த திருவள்ளுவர் திருவாய்மலர்ந்தருளிய செய்யுளால் தெளிக.

"ஒழுக்கம் விழுப்பந்தரலான்
ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்"

இம்மை மறுமைக்குத் துணையாகவிருக்கும் தர்மமெது வென்று பல நூல்களையு மாராயுமிடத்து ஒழுக்கமே முக்யமெனச் சொல்லியிரு க்கின்றமையால், அவ்வொழுக்கத்தை எவ்விதத்திலும் தப்பிப்போக வொட்டா தபடி காப்பாற்றவேண்டும்.

"பரிந்தோம் பிக்காக்க ஒழுக்கந்
தெரிந்தோம்பித் தேரினும், அஃதே துணை"

சாதியாசாரத்திற்குத்தக்க வொழுக்கத்தையனுசரித்து நடத்தலால் நல்லகுலத்த னாவானென்றும், அவ்வொழுக்கத்திற்கு விரோதமாய் நடப்பவன் இழிகுலனாவானென்றும் பல நூலிலும் விதியாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

"நன்றிக்கு வீத்தாகு நல்லொழுக்கக்
தீயொழுக்கம் என்றும் இடும்பை தரும்"

பிராமணன் வேதத்தை மறந்து விடுவானானாலும் மறுபடியுங் கற்றுக்கொள்ளலாம். ஒழுக்கத்தை விட்டுவிட்டால் அவனது உயர்ந்த ஜாதித்தன்மை கெடுமே யல்லது உயர்வாக மாட்டாது. பொறாமையுடையவனிடத்துச் செல்வம் நிலையாது போலவே நல்லொழுக்க மில்லாதவனிடத்து மேன்மை நிலைத்திருக்க மாட்டாது.

"அழுக்கா றுடையான்கண் ஆக்கம் போன்றில்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு"

ஒழுக்கத்தை விட்டால் இழிகுலஸ்தனாக வேண்டுமென்றறிந்த புத்திமான்கள் அவ்வொழுக்கத்தி லிருந்து சிறிதும் வழுவார்கள். நல்லொழுக்கத்தால் விட்டத்வமும்

# ஒழுக்கம்

அஃதில்லாமையால் ப்ரஷ்டத்வமும் உண்டாகுமென்பதற்கு ப்ரமாணமென்னவெனில் நன்மைக் கெல்லாம் மூலம் ஒழுக்கமென்றும் தீமைக்கெல்லாம் மூலம் ஒழுக்க மில்லாமையென்றும் சொல்லப்பட்டிருப்பது வேயாம், ஒழுக்கமுடையவர்கள் தங்கள் ஜாதிக்குங் குலத்துக்குந் தகாதபொய் முதலியவைகளை மறந்து நீக்கிவிடுவார்கள். ஒருவேளை நீக்காமலிருப்பார்களா சில்நல்லொழுக்கமில்லாத நீசரெனப்படுவதற்கு ஸந்தேஹிக்க வேண்டுவதில்லை. கல்விக்குப்பயன் அறிவு; அறிவுக்குப்பயன் ஒழுக்கம் இவ்வொழுக்கத்தை யுணர்ந்து நடக்கக் கல்லாதவர்கள் பல நூல்களைக் கற்றும் அறிவிலா ரென்றே சொல்லப்படுவார்கள்.

இக்கருத்து நோக்கியே நாயனார் வாக்கு எழுந்ததுபோலும்.

"உலகத்தோ டொட்ட ஒழுகல்
பலகற்றுங், கல்லார் அறிவிலா தார்"

ஆதலால் யாவரும் ஒழுக்கத்தை மேற்கோண்டு நடக்கவேண்டும்.

இப்படிக்கு
தங்கள் மெய்யன்பன்
நாகை. S. மெய்கண்ட முதலியார்.

சித்தாந்தம் - 1915 ஆம் - மார்ச்சு மீ